# சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம் செட்டியார் காலமானார்

(எம். எஸ். மணியம்)

கோலாலம்பூர், அக். 29- சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம் செட்டியார் நேற்று தமது புதுக்கோட்டை இல்லத்தில் காலமானார்.

72 வயதான முரு. பழ. இரத்தினம் செட்டியார் மலேசியாவிலும் தமிழகத்திலும் நன்கு அறிமுகமான சமயச் சொற்பொழிவாளராகத் திகழ்ந்தார்.

தமிழ் நேசன் நாளிதழில் சைவ சமயக் கேள்விகளுக்கு விளக்கம் அளித்து நேசன் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமாகி இருந்தார்.

மலேசியாவில் திரு. செட்டியார் மூவார் மற்றும் பத்துபகாட்டில் தமது குடும்பத் தொழிலைச் செய்து கொண்டே நாடு முழுவதும் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றி வந்தார். சிறந்த தமிழ் அறிஞராவார்.

இவருக்கு ஒரு மகனும் நான்கு மகள்களும் உண்டு. செட்டியாரின் துணைவியார் திருமதி மீனாட்சி ஆச்சியாவார்.

இவரது மணி விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டு மலரும் வெளியிடப்பட்டுள்ளது. பல புத்தகங்களும் எழுதியுள்ளார்.

திரு. செட்டியார் 18. 8. 1921ஆம் தேதி தமிழகம் புதுக்கோட்டை அருகே விராச்சிலை என்னும் சிற்றூரில் பிறந்தவராவார்.

இவரது மூத்த சகோதரர் திரு. முரு. பழ. கோபால் செட்டியார் பத்துபகாட்டில் வசிக்கிறார்.

தமிழ் நேசன், வெள்ளிக்கிழமை, அக்டோபர் 29, 1993